1114

உ

சிவமயம்.

கணபதி துணை.

அருப்புக்கோட்டை யெனவழங்கும்
திருநல்லூரில் தெற்குரதவீதியின்கண்
திருக்கோயில் கொண்டருளிய

# ஸ்ரீ சௌடாம்பிகை
# தோத்திரப்பாமாலை.

இஃது

ஷை அருப்புக்கோட்டை தெற்குரதவீதி தேவாங்கர்குலம்

மகா-ள-ள-ஸ்ரீ

## தொ. ச. சவுடப்ப செட்டியார்

அவர்களாலியற்றப்பெற்று

ஷை அருப்புக்கோட்டைத் தெற்குரதவீதி தேவாங்கர்குலம்
சிலோன் ஜவுளி வியாபாரம் மகா-ள-ள-ஸ்ரீ

நா. சாமி. சாமிநாதன் செட்டியாரவர்கள்

பொருளுதவியினால்

மதுரை
மீனலோசனி அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

துந்துபி௵ வைகாசி ௴

இதன் விலை அணா 4.

9 - SEP 1929
CQ25:38·2195AP
M29
183549

உ

சிவமயம்.

கணபதி துணை.

அருப்புக்கோட்டை யெனவழங்கும்
திருநல்லூரில் தெற்குரதவீதியின்கண்
திருக்கோயில் கொண்டருளிய

# ஸ்ரீ சௌடாம்பிகை

# தோத்திரப்பாமாலை.

இஃது

ஷை அருப்புக்கோட்டை தெற்குரதவீதி தேவாங்கர்குலம்
மகா-ௐ-ௐ-ஸ்ரீ

**தொ. ச. சவுடப்ப செட்டியார்**

அவர்களாலியற்றப்பெற்று

ஷை அருப்புக்கோட்டைத் தெற்குரதவீதி தேவாங்கர்குலம்
சிலோன் ஜவுளி வியாபாரம் மகா-ௐ-ௐ-ஸ்ரீ

**நா. சாமி. சாமிநாதன் செட்டியாரவர்கள்**

பொருளுதவியினுல்

மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

துந்துபிவூ வைகாசி மீ

இதன் விலை அணு 4.

# சாற்றுக்கவிகள்.

புளியம்பட்டி புராணிகர் மகா-ா-ா-ஸ்ரீ

## சொ. சண்முகசுந்தரம் பிள்ளையவர்களியற்றியது.

நல்லோரு மெல்லோரும் பல்லாறுங் கடல்புகுமங் நலமே போலச்
சொல்லாரும் புகழ்த்தன தா மானந்தக் கடல்படிந்து துய்க்கச்செய்யும்
எல்லூரு முடிச்சவுட வல்லிதெற்குத் தெருக்கோயி லிருந்தாண் மீது
நல்லூர்வாழ் சவுடப்பன் பற்பலபாப் புனைந்துமிகு நலம்பெற் றானே.

புளியம்பட்டி ஸ்கூல் மானேஜர் மகா-ா-ா-ஸ்ரீ

## வள்ளி நாயகம் பிள்ளையவர்களியற்றியது.

சேலுற் றிடும்வயல் நல்லூர் வளம்பதி சேர்ந்திலங்கும்
ஞாலத்து ளோர்தொழுஞ் சவுடாம் பிகைபத நாண்மலர்க்குச்
சீலத் துடனைந் திலக்கணப் பாவணி செய்தணிந்தான்
சாலத் தமிழ்க்கவி நாவல னென்னுஞ் சவுடப்பனே.

அருப்புக்கோட்டை மகா-ா-ா-ஸ்ரீ

## திரு. சிறைமீட்டியா பிள்ளையவர்களியற்றியது.

எல்லோரும் போற்றுஞ் சவுடாம் பிகையெங்க ளீஸ்வரிமேற்
சொல்லாற் றுதிக்குந் தமிழ்ப்பா வணிந்தனன் றொல்லுலகி
னல்லோர் புகழ்சவு டப்பனென் றேதுகன் னாவலவன்
வல்லா ரிதைக்கண்டு வானா ரமுதென்று வாழ்த்திடவே.

புளியம்பட்டி சாலிமகாரிஷிகோத்திரம் மகா-ா-ா-ஸ்ரீ

## சு. கந்தசாமி மூப்பனாரவர்களியற்றியது.

வெண்பா.

தேனுலவு சோலைநல்லூர்த் தென்வீதிப் பொற்றளிமெய்
யானசவு டாம்பிகைவந் தாதரித்தாள்—தானனைபேர்
கொண்ட தமிழ்க்கவிஞன் கூறியபா மாலைதுதித்
தண்டருளத் தன்பாயி னார்.

புளியம்பட்டி தோப்புத்தெரு,
சாலிமகாரிஷி கோத்திரம்
மகா-௱-௱-ஸ்ரீ மாகாளி மூப்பனாரவர்கள் குமாரர்
மாடசாமி மூப்பனாரவர்களியற்றியது.

செந்தமிழ்க் கடலி னிலக்கிய முதலாச்
செப்புமைந் திலக்கண மென்னுஞ்
சிந்துமொண் டறிஞ ரவைவிசும் புலவித்
திருநலூர்ச் சினகரத் துகந்த
அந்தரி யமலை சவுடநா யகிபொன்
னடியின்மீ தரியபல் வேறு
சந்தமா மாலைத் தண்மழை பொழிந்த
சவுடப்ப னெனும்பயோ தரமே.

புளியம்பட்டி சாலிமகாரிஷி கோத்திரம் மகா-௱-௱-ஸ்ரீ
மாகாளி மூப்பனாரவர்கள் குமாரர்
கற்பகமூப்பனாரவர்க ளியற்றியது.

தங்கடுயர் தீர்த்தரு ளெனக்குறை யிரந்தசுரர் தங்கள்மனதிற்
சங்கட மொழிக்கமகி டன்றனை வதைத்தசவு டம்பிகைதிருச்
செங்கமலநற்பதமுளங்கொடுபவப்பகை தெறும்படியதாய்ப்
பொங்குமது ரக்கவி புனைந்தன னெழிற்சவு டயப்பபுகழோன்.

புளியம்பட்டி சாலிமகாரிஷி கோத்திரம் மகா—௱—௱—ஸ்ரீ
மாகாளிமூப்பனர் அவர்கள் குமாரர்
முத்துசாமிமூப்பனாரவர்க ளியற்றியவை.

அடியொருவன்றேடிடவுமுடியொருவன்றேடிடவுமகப்படாத
படியொருவ னாகிநின்ற பாஞ்சுட ரிராமலிங்கர் பங்கிற்றங்கி
அடியருவந் தேத்தவருள் சவுடநா யகிமீதி லன்பா மாலை
படியொருமூன் றினுமணக்கத்தொகுத்தணிந்தான்சவுடப்பபாவல்லோனே.

எழுதுவதுங்கலைமகளேயெதிரிருந்துந்தனதிதயத்திருந்துங்கம்பன்
பொழுதகலு முனங்கவியோ செழுநூறு வீதமதாய்ப் புகழே யன்றிப்
பழுதணுவத் தனையுமிலா விராகவன்றன் சரித்திரத்தைப் பகர்ந்தானேனும்
முழுதுமிது போலியம்ப முடியாது முடியாது முடியாதம்மா. (2)

அருப்புக்கோட்டை தேவாங்கர் ஸ்கூல்களின் மானேஜர்

தேவாங்கர் குலம் மகா-ா-ா-ஸ்ரீ

யஸ். நாகலிங்கஞ்செட்டியா ரவர்களியற்றியது.

நேரிசை வெண்பா.

நல்லூரி ராமலிங்கர் நாயகிசெள டம்மைபதஞ்
சொல்லூரிப் பாமாலை சூட்டிநிதந்—தொல்லுலகோர்
சித்தியொடு முத்திபெறச் செய்தளித்தான் முத்தமிழ்தேர்
உத்தமசெள டப்ப னுவந்து.

அருப்புக்கோட்டை தேவாங்கர்குலம் மகா-ா-ா-ஸ்ரீ

ம. பு. ச, சிவசங்கரன் செட்டியாரவர்கள் குமாரர்

பூலூர்சாமிசெட்டியாரவர்களியற்றியவை.

சீர்கொண்ட விண்டலங் கொண்டுமே லோங்குமா
திகழ்கற்ப கக்காவுமேழ்
கார்கொண்ட தெங்குசெண் பகமேனை மேகார
கனிமதுர கீதமோதும்
பேர்கொண்ட பைங்கிளிக் கோகிலவெ ணேதிமம்
பெடைசூழ மறைமுழக்கங்
கார்கொண்ட பாவைவா யமலையை யொழிக்கும்வான்
கலைகொண்ட நல்லைநகரே. (1)

வேறு.

அந்நகர்க் கணியா யார்ந்தநற் றளிகொண்
டருளியின் னுருயிர்த் துணையாய்க்
கன்னன்முக் கனியாய்க் கண்டுவிண் ணமுதாய்க்
கங்கைசூ ழுலகமா தியதாய்
மின்னவிர் கதிர்மா மதியதாய் ஞான்றும்
விளங்குமான் மாவெனும் பொருளாய்ப்
பன்னலங் கரூமுட் பருகிவா னமர்ந்த
பழவடி யாரகக் கொழுந்தாய். (2)

கலையதாய்க் கலையுட் கனிந்தவா னந்த
கற்பகத் தின்சுவைக் கனியாய்த்
தலையதா யெவைக்குந் தனித்தநூ வெளியிற்
றங்கியாள் மோனநல் வாழ்வாய்
இலையதா யுளதா யாவுமா யமைந்தே
யீறிலாப் பொருளதா யாதி
நிலையதா யன்பாய் நின்மலா னந்த
நித்திய தத்துவப் பொருளாய். (3)

போதமே யுருவாய்க் கொண்டெழுந் தருளிப்
புன்மையேன் றன்னையேன் றருளி
வேதமே யறியா விமலமாய் விபுவாய்
வேணியா ரிராமலிங் கேசர்
பாதமே புகழும் பச்சிளங் கொடியாய்ப்
பல்லுயிர்க் குயிரதா யனையாய்ச்
சீதமே கொழிக்கு மிந்துநீள் பணிகொள்
செல்விசா முண்டிபூங் கழற்கே. (4)

மணிமலர்க் கனக மாலைவேய்ந் துறிலோ
மங்குறும் புலர்ந்துதேய்ந் திடுமால்
அணிகெழுஞ் சடையெம் மாதிமென் காத்தா
லமைத்தவர் செவிமடுத் துண்ட
தணிசைமுத் தமிழ்மா மலர்ச்செழுந் தொடைநற்
றுலமூன் றிலங்கவே யணிந்தான்
அணிகமூர் கவிஞர் புகழ்சவு டப்ப
னருட்கவி மதுரநா வலனே. (5)

அருப்புக்கோட்டை இராமாயணப் பிரசங்கவித்வான் மகா-ா-ா-ஸ்ரீ

## ஆர். யம். யஸ். கனகசபாபதித் தேவரவர்களியற்றியது.

தேனுண்டு களிகொண்டு மதுகரம் பாடுபூந்
தெரியலணி மாதர் வதனஞ்
செழுமதி யெழுந்ததென் றும்பல்வா யவிழ்தடஞ்
செறிநல்லை நகரில் வாழு
மானுண்ட கண்ணியென் னம்மைசவு டாம்பிகை
மலர்ப்பதத் தினிய தமிழான்
வான்முறை யிலக்கண விலக்கிய மலிந்ததிரு
மாலைகவி யாற் புனைந்தான்

வானுண்டு கடனீரை முகில்பெய்த தென்னவே
மாநிலத் தெவரு மகிழ
வளம்பெருது தேவலன் மாபில்வரு சவுடப்ப
மாகவிஞ னென்ப மன்னே
ஊனுண்ட வுடல்சுமந் துலகினிற் பல்பிறவி
யுற்றிடா வண்ண முன்னி
யுயர்பதம் பெறுமன்பர் குழுவுடன் கூடியே
யுட்குறை தவிர்க்க வென்றே.

அருப்புக்கோட்டை தேவாங்கர்குலம் மகா-ா-ா-ஸ்ரீ

பூ. அ. கந்தசாமி செட்டியாரவர்களியற்றியது.

தண்டேன் பொழியும் பொழில்சூழ்நல் லூர்தனிற் சந்ததம்வாழ்
வண்டார் குழல்சவு டம்மையெந் நாளு மனதுவப்பத்
தொண்டே புரியுஞ் சவுடப்ப னேதுந் துதிப்பனுவல்
கண்டோ கரும்போ வமுதோவென் பார்கவி கற்றவரே.

அருப்புக்கோட்டை தேவாங்கர்குலம் மகா-ா-ா-ஸ்ரீ

கே. வீ. ஆர். தருமலிங்கஞ் செட்டியாரவர்களியற்றியது.

தந்தியெட் டுடனே திசையெலாம் புடைசூழ்
தாரணி தனில்மிகு புகழே
தங்கிய திருநல் லூர்தனைச் சார்ந்த
தக்கண வீதிநம் மாபோர்
பந்தியாய்க் கோடி பானுவந் துதித்த
பான்மையாய்ப் பகர்ந்திட மணிகள்
பதித்துமே லான பைம்பொனு லிழைத்த
பாங்குறு சிகரநற் றளிவாழ்
சுந்தர மிகுந்த விராமலிங் கேசர்
துணைவியாஞ் சவுடநா யகிமேல்
துலங்குபாற் கடலி னமுதமுக் கனியிற்
றோன்றிய சுவையுமோ வென்ன
இந்திரன் முதலா மிமையவர் முனிவோ
ரெவர்களுஞ் செவிமடுத் துண்ணு
மினிதுறுந் தமிழ்ப்பா மாலைகோத் தணிந்தா
னெழில்சவு டப்பநா வலனே.

அருப்புக்கோட்டை வாழவந்தம்மன் கோயில் அருதாரும்
ரிசல்டு பாடசாலை உபாத்தியாயருமாகிய மகா-ள-ள-ஸ்ரீ
வா. வாழவந்த பண்டாரமவர்களியற்றியது.

சீர்கொண்ட செந்நெல்வளர் கழனியொடு பூம்பொழில்
செழித்தோங்கு திருந லூரில்
தேவாங்கர் குலமகிபர் வாழ்தெற்கு வீதியிற்
றெய்விகம தாயமைந்து
பார்கொண்ட புகழ்மிகுந் சிகாரற் கோயிலிற்
பவிசுட னுகந்தருளேயே
பாலிக்கு மெமதன்னை சௌடநா யகிதனிரு
பாததா மரைமலர்க்குப்
பேர்கொண்ட நன்மைமிகு சொன்மலர் தொகுத்தாசை
பெருகுமன் பென்னுநாரிற்
பெருமைமிகு தோத்திரப் பாமாலை வணைதந்து
பேருவகை யுடனணிந்தான்
ஏர்கொண்ட பலகலைக ளுந்தேர்ந்து வான்மழையை
யின்புறப் பொழிவதெனவே
யிசைமிகுந் தமிழ்மழை வழங்கினன் சௌடப்ப
னென்னுமுயர் நாவ லோனே.

அருப்புக்கோட்டை தெற்குத்தெரு, தேவாங்கர்குலம் மகா-ள-ள-ஸ்ரீ
வ. சி. சுப்பன் செட்டியாரவர்கள் குமாரர்
ரெங்கசாமிசெட்டியாரவர்களியற்றியது.

கொங்குலவு பூம்பொழில்சூழ் நலைமேவு மிராமலிங்கர்க்
குரித்தாய் வாம
பங்கினுறை சவுடவல்லி யெமதன்னை யருட்கடலாய்ப்
பணிந்தோர்க் கெல்லாம்
மங்களமாய் வரங்கொடுத்துப் புகழ்தரித்து முடிதரித்தாண்
மலர்த்தாண் மீது
துங்கமிகு பாமாலை தொடுத்தணிந்தான் சவுடப்ப
தூயோன் மன்னே.

---



உ

சிவமயம்.

9 - SEP 1922





# ஸ்ரீ சௌடாம்பிகை
# தோத்திரப் பாமாலை.

## விநாயகர் துதி.

சீர் பொருந்து சிவசவு டாம்பிகை
தார் பொருந்து புகழ்தனைச் சாற்றவே
கார் பொருந்து கரிமுகத் தைங்கர
னேர் பொருந்து பதந்துணை யென்றுமே. (1)

உலகெ லாந்தொழு மன்னையா யுயிர்க்குயி ராகி
நலமெ லாந்தரு ஞானநா யகிபதந் துதிக்கு
மிலகு பைந்தமிழ்க் கிறைவனை யினியமாங் கனிக்காய்
வலம தாய்வரு கரிமுக வள்ளலைப் பணிவாம். (2)

மெய்ச்சி ரத்தையா யன்பொடு வணங்குமெய் யடியார்
பொய்ச்சி ரத்தையைத் தவிர்த்தருள் புரிந்திடும் புனிதன்
அச்சி றுத்தபின் னங்கணார்க் கருண்முதற் பொருளைக்
கைச்சி ரத்தின்மேற் கொண்டுபூங் கழல்பணிந் திடுவாம். (3)

## சரஸ்வதி துதி.

கலையு கந்தரு ணாரணி மீதுாகன்
னிலையு கந்த பனுவல் நிகழ்த்தவே
தலையு கந்தவெண் டாமரை தங்கிநற்
கலையு கந்தருள் வாள்கழ லுன்னுவாம்.

## அவையடக்கம்.

சில மாகிய மேலவர் பேசிடத் தெரிந்து
பால ரும்பகர்ந் திடுவதோர் பான்மையை நிகர்ப்ப
ஞால மேதொழு மன்னையாஞ் சவுடநா யகிமேற்
சால வும்புகழ்ப் பனுவலைச் சாற்றுதற் கமைந்தேன். (1)

திங்க ளாகிய நிறைமதி சேணிடை வயங்க
அங்கை யிற்றொடு வோமென வார்வமுற் றவர்போற்
றங்கு பேரரு ளன்னையாஞ் சவுடநா யகிமேற்
றுங்கமாய்த்தொழும்பனுவலைச்சொல்லுவான்றுணிந்தாம். (2)

கல்வி ஞானமே கண்டறி யாதவ னெனினுஞ்
செல்வ மோங்கிய சிவசவு டாம்பிகை யனைமேற்
சொல்லு கின்றபா மாலையைத் தூயவரெவரும்
நல்ல தோர்புகழ்ப் பனுவலாய் நயந்தருள் வாரே. (3)

## நூல்.

சீரணிந்தசெந் தாமரைச்செல்விவாழ்
தோரணங்க டுலங்குநல்லூரினி
லாரணங்க டுதிக்கவருள்செயுந்
தாரணிந்திடுந் தாய்சவுடம்மையே. (1)

கோலமேவிய கொண்டல்பொழிந்திடச்
சீலமேவும் வளங்கள்செழித்திடும்
ஞாலமேபுகழ் நல்லையிலன்பர்கள்
சாலவுந்தொழுந் தாய்சவுடம்மையே. (2)

எங்குமாகு மிராமலிங்கேசர்தம்
பங்குவந்த மரகதப்பாவையே
கொங்குலாவு மலர்ப்பசுங்கூந்தலா
யிங்கெமக்கருள் வாயினிதம்மையே. (3)

தேசிகன்றனைச் சேர்ந்துபதேசமே
நேசமாகப் பெறும்நெறிநல்குவாய்
மாசிலாத மரகதக்குன்றமே
பூசுரர்க்கரு ளும்புகழம்மையே. (4)

வந்தவெம்பிணி யாவையுமாற்றிடும்
சுந்தரந்திகழ் சோதிசொரூபியே
முந்துமாமறை மூதுணர்வோரெலாம்
சந்ததந்தொழுந் தாய்சவுடம்மையே. (5)

திங்கள்சூடிய செஞ்சடைவள்ளலார்
பங்கில்வாழும் பனிமலைவல்லியே
அங்கண்ஞால மடங்கலுமேதொழத்
தங்குநல்லையெந் தாய்சவுடம்மையே. (6)

சந்தனங்கமழ் வீதிகள்தங்கிய
நந்தலில்புகழ் சேருநல்லூரினி
லெந்தநாளுமெய் யன்பர்களெண்மிகுஞ்
சிந்தைமேவுஞ் சிவசவுடம்மையே. (7)

அராவணிந்திடு மங்கணாகிய
இராமலிங்க ரிடந்தனிலேபுகழ்
பராவுகின்ற பாம்பொருளாகிய
தராதலந்தொழுந் தாய்சவுடம்மையே. (8)

கருமமேவிய கண்டகர்மாளவும்
பெருமராமர மேழும்பிளக்கவும்
பொருமம்பேவிய புண்ணியன்றங்கையே
தருமமேவிய தாய்சவுடம்மையே. (9)

பத்தியாகநின் பாதம்பணிந்திட
வுத்தமங்க ளனைத்துமுதவியே
முத்தியுந்தரு கின்றமுதல்வியே
சத்தியாகிய தாய்சவுடம்மையே. (10)

விண்ணுளாரு முனிவரும்வேண்டவும்
மண்ணுளார்களும் வந்துவணங்கவு
மெண்ணுளார்தரு மின்பமெலாந்தருந்
தண்ணுளார்தருந் தாய்சவுடம்மையே. (11)

எம்பிரானு மிராமலிங்கேசனு
மம்பொன்மால்வரை வில்லியுமாகிய
வும்பர்நாயகன் பாலுவந்தேவ்ளர்
செம்பொனேயுஞ் சிவ்சவுடம்மையே. (12)

அங்கண்மாநிலந் தன்னிலனைவரும்
தங்குதேவலன் றன்மாபோர்களுந்
துங்கமாகத் துதித்திடவந்தருள்
சிங்கவாகன மேவுசெஞ்சோதியே. (13)

தேவலன்றன் றிருமாபெய்தினோ
சேவல்செய்துன் பதத்தையிறைஞ்சியே
மேவுமன்புடன் வேண்டுதல்செய்யவே
சேவுகந்தருள் செய்திடுதெய்வமே. (14)

நின்பதஞ்சத மாகநினைந்துளத்
தன்பினோடு மிறைஞ்சிடுவோர்க்கெலாஞ்
செம்பொனுருந் திரவியநல்குவா
யும்பர்போற்று மொளிர்மணித்தீபமே. (15)

பொன்னைவேண்டுகி னும்புகழ்சேருமற்
றென்னைவேண்டுகி னுந்தருமீஸ்வரி
நின்னைவேண்டி நலம்பெற்றோர்ந்தனம்
அன்னையீண்டருள் வாய்சவுடம்மையே. (16)

ஓங்குபல்லுயி ருக்குயிராகியே
நீங்குறாது நிறைந்துறைதெய்வமே
யீங்குனைத்தொழு மெங்களுக்கின்பமே
தேங்குநின்கடைக் கண்ணருள்செய்வையே. (17)

உலகமெங்கணு மன்னையென் றுன்னியே
யிலகநாளு மிறைஞ்சியுனைத்தொழ
நலமிகுஞ்சுக வாழ்வருணல்கிடும்
அலகில்சோதி யமைந்திடுமன்னையே. (18)

இருவினைத்தொடர் பாலினிதெய்திய
அருமையாகுமிக் காயமழியுமுன்
னொருமையாகநின் றுண்மலருன்னியே
பெருமையாய்த்தொழும் பெற்றியருள்வையே. (19)

வானமங்கையர் வந்துபணிந்திடும்
ஞானநாயகி யேகமன்வந்திடா
மோனவாழ்வெனு முத்தியைநல்குவாய்
மானலந்திகழ் மாணிக்கவல்லியே. (20)

ஐந்தொழிற்குரி யாயருட்சத்தியே
விந்தைமிக்க விநாயகன்றன்னொடும்
கந்தவேளைப் பயின்றிடுங்கன்னியே
வந்தெனக்கருள் வாய்வரமன்னையே. (21)

எங்குற்றுரு மிறைஞ்சிடவேயிவண்
தங்குற்றுய்புகழ் சேர்சவுடம்மையே
சங்குற்றூர்குழைச் சங்கரர்பாலொரு
பங்குற்றுயருள் பாலிக்கவேண்டுமே. (22)

வண்டுழாய்முடி மாயவன்றங்கையே
கண்டுபோலுங் கனிந்திடுசெஞ்சொலாய்
தொண்டுகொண்டினி தாஞ்சுகநன்மையை
அண்டுமெங்கட் கருள்புரியம்மையே. (23)

வேறு.

திருவேமிகு ஞானசிகாமணியே
மருவேமண மிக்கமலர்க்கொடியே
தருவேயுயர் தண்ணளிதங்கியமெய்
உருவேயுனடைக்கல மொண்பொருளே. (24)

சிங்கார மிகுத்தசெழுஞ்சுடரே
மங்காத புகழ்க்கொருமாமணியே
யிங்கார்வ முறத்தொழுமெங்கள்பவந்
தங்காம லகற்றியசங்கரியே. (25)

அன்னேசவு டாம்பிகையாயிழையே
மின்னேய விடைக்கொடியார்மகிழும்
பொன்னேபுகழ் மிக்கபொலங்கொடியே
இன்னேவர நல்கவெழுந்தருளே. (26)

வேதாகம நூல்கள்விதிப்பவளும்
மாதாவென வெங்குமதிப்பவளும்
நீதானல வோநிதமெய்யடியர்க்
காதாரம தாகுமரும்பொருளே. (27)

பொன்னாபர ணங்கள்புனைந்தவளே
மின்னார்சடை மேவியமெய்ப்பொருளே
பன்னாளும் வணங்கியபாலனெனக்
கின்னாளருள் செய்யவெழுந்தருளே. (28)

மதிசேர்சடை யானைமணந்தருளிக்
கதிரேசனை நல்கியகன்னிகையே
பதிசேர்தரு நல்லைப்பராபரியே
துதிசேர்பனு வற்றொடைசூடுவனே. (29)

இன்னாள்வரை யுன்னையிறைஞ்சியுநீ
என்னோசிறி தேனுமிரங்கிலையே
அன்னேயருள் செய்வதுனக்கரிதோ
முன்னேபவ மென்னமுயன்றனனோ. (30)

சசிதண்குலம் வந்ததயாபரியே
திசையெங்கணும் வென்றருள்சேயிழையே
வசையென்ப தெமக்குவராமலருள்
யிசையெங்கு நிரம்பியசஸ்பரியே. (31)

விதிக்கும்பிர மாதியர்வேண்டிடவே
கதிக்கும்பொரு ளாகியகாரணியே
மதிக்கும்பொரு ளுன்னைவணங்கவருள்
நிதிக்கிங்கு நிலைத்தகளஞ்சியமே. (32)

என்றுந்நிலை யாகவிருப்பவளே
யின்றுன்னை வரம்பெறவெய்தினன்யான்
ஒன்றும்பல தீமையொழித்தருளி
நன்றென்பது நாடொறுநல்குவையே. (33)

சிகரத்தொடு மேவுதிருத்தளிவாழ்
தகரக்குழல் கொண்டதயாபரியே
பகரற்கரி தாயபரம்பொருளே
நிகரற்று விளங்குநிராமயமே. (34)

இற்பாலவ ராகியிலங்கிமிகுங்
கற்பாலெழில் காணுமடந்தையர்வாழ்
நற்பார்புகழ் நல்லைவளம்பதியிற்
பொற்பார்சவு டம்மைபதம்புனைவாம். (35)

மெய்யே யுருக்கொண்ட பேரன்பர் நாளும் வியந்துதொழப்
பொய்யே யகற்றிப் புலன்களைந் தாம்பகை போக்கிடுவாய்
நெய்யே யமைத்த விளக்கேமெய்ஞ் ஞான நெறியருள்வாய்
செய்யேந் தியதிரு நல்லூரில் வாழுஞ் சிவசத்தியே. (36)

நம்பித் துதிக்குமெய் யன்பருக் கேயரு ணூட்டந்தருங்
கொம்பிற் பழுத்த கொழுங்கனி யேகற் குணக்குன்றமே
செம்பொற் பதாம்புயந் தந்தே திருவருள் செய்திடுவாய்
உம்பர்க்கு முண்ணக் கிடையா வமுதத்தி னெண்சுவையே. (37)

சீர்மேவு மெய்யன்ப ருள்ளக் கமலத்தைச் சேர்ந்திலங்கும்
பேர்மேவு மன்னப் பெடையாகி நற்புகழ் பேசிடுஞ்சொற்
றூர்மேவு சத்தி சவுடாம் பிகையன்னை தாள்பணிந்தே
பார்மேவு மாந்தர் சுகவாழ்வு பெற்றிடப் பாருங்களே. (38)

விடைமே லுகந்திடுந் தாயேமெய்ஞ் ஞான விளக்கொளியே
கடையேன் றனைக்கடைக் கண்பார்த்து வந்துன் கருணையருள்
சடைமேவு கங்கை முடியா ரிடந்தனிற் றங்கியமெய்
யுடையாய் சிவசவு டாம்பிகை யாகிய வொண்பொருளே. (39)

திங்கா னதுவந் தனுகா மனுமுன்றன் சேவடிக்கே
நீங்காத பேரன்பு தந்தே கருணையு நேர்ந்தருள்வாய்
தேங்கா ருயிர்க்குயி ராய்நிறைந் தேயெங்குந் தேர்ந்திலங்கும்
பாங்கார் புகழ்மிகுந் தாயே யருள்செய் பராசத்தியே. (40)

வருந்திப் பலதொழில் செய்தே யுழன்றனை மாநிலத்தில்
திருந்திக் கலையொடு மெய்ஞ்ஞான முங்கற் றுத் தேர்ந்திலையே
மருந்திற் கினிய மொழிசவு டாம்பிகை மாமலர்த்தாள்
பொருந்திப் பணிந்திலை நெஞ்சே யுனக்கென்ன புண்ணியமே. (41)

வண்டாடு பூங்குழன் மாதர்கண் மோக மயக்கத்தையே
கொண்டாடு கின்ற சிறியேன் றனக்கருள் கூர்வதெந்நாள்
தண்டா மறையித ழோராயி ரங்கொள் தவிசுகந்து
பண்டா யயன்மறை பாடும் படிதங்கும் பார்ப்பதியே. (42)

பாடுந் திருவருட் பாமாலை சூடிய பாவலர்க்கு
நாடும் பொருளருள் நாதாந்தப் பேரொளி நாயகியே
நீடும் புகழ்கொண்ட மெய்ஞ்ஞான போதத்தை நேர்ந்தருளி
வாடுந் தமிய னிடர்தீர்த் திரட்சிக்க வந்தருளே. (43)

சேவேறு மீசர் மணத்தே யுதித்திடுந் தெள்ளமுதே
மாவேறு கண்களும் செங்கனி வாய்முத்த வாணகையும்
பூவேறு கூந்தலுங் கண்டுகண் டங்கணர் பொங்கிமகிழ்
பாவே றியதிரு நல்லூரில் வாழும் பராசத்தியே. (44)

பால்கொடுத் தேதிரு ஞானசம் பந்தரைப் பாடவைத்தாய்
வேல்கொடுத் தேகும ரேசனைச் சூரனை வெல்லவைத்தாய்
நூல்கொடுத் தேயன்று தேவலன் பாலரு ணோக்கம்வைத்தாய்
மால்கொடுத் தேய்ந்த பிணிமாற்றி ரட்சிக்க வந்தருளே. (45)

புனமேவும் வள்ளி மணவாள னைப்பெற்ற பூங்கொடியே
யினமேவு பேரன்பர் கூட்டத்தைச் சேர்ந்தவர்க் கேவல்செய்து
சினமேவு சிங்க மிசையே யுகந்தநின் சேவடியைத்
தினமே வணங்கித் துதிக்கும் படிக்கருள் செய்குவையே. (46)

முன்னைத் துதிக்கும் பழம்பாடற் செல்வர்க்கு மோட்சந்தரு
முன்னைத் துதிக்கும் படியாயென் வாக்கி லுகந்தருள்வாய்
பொன்னைத் துதிக்கும் புகழ்ச்செல்வ ரோடும் பொருந்துகலை
மின்னைத் துதிக்குந் தமிழ்ச்செல்வர் வாழ்நல்லை மெய்ப்பொருளே (47)

மாசற்ற பேரன்ப ருள்ளத் திருண்மல மாற்றிவிட்டுத்
தேசுற் றிடுஞ்சுடர் மெய்ஞ்ஞான தீபஞ் செழிக்கவைக்கும்
ஆசற் றிடும்புக ழார்சவு டாம்பிகை யன்னைபதம்
பேசித் துதித்தின்ப வீடே பெறும்படி பேணுநெஞ்சே. (48)

ஈட்டுந் தவத்திலிம் மானிட யாக்கையை யெய்தியுமே
நாட்டுங் கருணைச் சிவசவு டாம்பிகை நாண்மலர்த்தாள்
சூட்டுஞ் செயல்புரிந் தாயிலை தீவினை சூழ்நெஞ்சமே
வாட்டும் பிறவிக் கடல்கடந் தேறிட வாய்ப்பதென்றே. (49)

வெள்ளங் கனிந்திடும் பேரின்ப வாரியை மேவியென்ற
னுள்ளங் கனிந்தே திருப்பாடல் செய்ய வுவந்தருள்வாய்
அள்ளும் புகழ்திருப் பாற்கடற் றோன்றிய வாரமுதே
தெள்ளும் புகழ்மிகு மன்னேநல் லூர்வாழ் சிவசத்தியே. (50)

மாயப்ர பஞ்ச மயக்கந் தவிர்த்தே மனோலயமாய்
வாயிற் சிவாய நமவென்று கூறுநன் மந்திரத்தை
நீயுச் சரித்துத் தவமே பொருந்தி நிலையினின்றால்
காயத்தி னுக்கழி வெய்தாது வாய்க்குங் கதிநெஞ்சமே. (51)

ஆக்குந் தொழில்கொண் டகிலாண்ட கோடிக ளாக்கியவை
காக்குந் தொழில்தனிற் றண்ணரு ளேகொண்டு காத்திடுவாய்
வாக்கு மனமுங் கடந்த புராதனி வான்கருணை
தேக்கும் படிக்கருள் செய்வா யெனக்குச் சிவானந்தியே. (52)

வேறு.

துங்க மாகிய தேவலன் றன்மா புதித்த
எங்கண் மாதவப் பயனென வெழுந்தரு ளன்னையே
பொங்கு பேரெழிற் பொன்னெடுங் கோயில்கொண் டருளுஞ்
சிங்க வாகனச் செல்வியே கருணைநீ செய்வாய். (53)

நீங்க லாதபே ரன்புட னினைப்பணிந் திடவே
தீங்க லாததோர் நன்மையுஞ் செல்வமுஞ் சிறப்பும்
ஈங்கெ மக்கரு ளன்னையே யீறிலாப் பொருளே
பூங்க ழற்றுணை யல்லது புகலிட மிலையே. (54)

இந்தி ராதியர் பணிந்திடு மிசைமிகும் பொருளே
வந்தி ராப்பகல் வணங்கிடு மெங்கண்மா பவங்கள்
சிந்தி நாடொறுஞ் செய்தொழி லாதியஞ் செழிக்க
வந்தி டாயருள் வழங்கிடாய் சவுடநா யகியே. (55)

மாலை வேண்டிநன் னூலது வாங்கியே வருநாள்
வேலை வாய்விரைந் தவுணர்வெஞ் சமர்முனை விளைப்பச்
சால வுந்தடு மாறிய தேவலன் றனக்குக்
கூல மாகுநின் னருள்தருங் குணப்பெருங் கடலே. (56)

திடங்கொண் மாமுடி மகிடனைச் சிதைத்தசெந் திருவே
இடங்கொண் மாபெருஞ் சராசர மெவையுமீன் றருளி
யடங்கு மாறுமுண் டாக்கியு மாடல்செய் யன்னையே
தடங்கள் சூழ்ந்திடு நல்லைவாழ் சவுடமா மணியே. (57)

பந்த பாசமாம் பிறவிசா கரத்திடைப் படிந்தே
யெந்த நாளுமே கவலையுற் றுணையிறைஞ் சாமல்
சிந்தை நொந்துநாட் கழித்திடுஞ் சிறுவனு மெனக்கு
முந்து மாபெரு முத்தியாங் கரைகொடுத் தருளே. (58)

அடிமை யாகவே யனுதினம் வணங்கிடு மெனக்குக்
கொடிய தீமையும் வறுமையும் வேரறக் குறைத்து
நெடிய மாபெருங் கருணையு நிதியுநேர்ந் தருள்வாய்
கடிகொள் பூம்பொழில் நல்லைவாழ் கருணையங் கடலே. (59)

வானு லாவிய தேங்கிளங் கமுகொடும் வளர்ந்த
கானு லாவிய கதலியுங் கன்னலுஞ் செழித்துத்
தேனு லாவிய மணமலர்ப் பொய்கையுஞ் சிறக்கு
மான பேரெழில் நல்லையம் பதியணங் காசே. (60)

மங்க லம்பெறு நல்லைவாழ் மாந்தர்க ளெவரும்
அங்கண் மாநிலத் தனைவரு மனைவணங் கிடவே
சங்க மாநிதி முதலிய நிதியெலாந் தரவே
யிங்கு வாழ்வுறு மெழில்சவு டாம்பிகை யனையே. (61)

நாளுநந் தண்ணரு ளிராமலிங் கேசர்நா யகியே
மூளும் வெம்பவக் கடலிடை மூழ்கிடா வண்ணம்
நீளு மம்புவி மாந்தருக் கருள்செயு நின்றாட்
காள தாக்கியென் றீவினை களைந்தரு ளனையே. (62)

நண்ணும் வான்புக ழணங்கா சாகிநா டோறும்
விண்ணு ளார்களு முனிவரும் வியப்பொடு வணங்க
எண்ணு ளார்தரு நலங்களுஞ் சுகங்களு மிசையும்
தண்ணு ளார்தரு கருணையுந் தருந்தயா பரியே. (63)

என்ன செய்குவே னென்மன முருகிட லிலையே
கன்ம னத்தினேன் கண்கணீர் ததும்பிடே னாகி
அன்னை நின்பதம் பணிந்திட வறிவிலா வெனக்கு
உன்னு மெய்வரங் கொடுப்பதற் குகந்தநா ளுளதோ. (64)

மஞ்சு தோய்பசும் பொழிலெலா மதுமழை பொழியும்
கஞ்ச மாமலர்த் தடமெலாங் கடிமணங் கமழும்
விஞ்சு வான்புகழ் நல்லையில் விளங்குமின் னிசைசேர்
அஞ்சொ லார்தரு மன்னையே யடியனேற் கருளே. (65)

உதய மாய்வருங் கதிரென வொளிர்மணி முடிசேர்
மதிகொள் வாண்முக மண்டல மிருளெலா மாய்ப்பக்
கதியை மாந்தருக் கருளிய கருணையங் கடலே
ஆதிகொ ணல்லையிற் றுலங்கிய சவுடமா மணியே. (66)

கஞ்ச மாமலர்த் தாடொழுங் கடமையு மெனக்கே
அஞ்ச லஞ்சலென் றருள்செயுங் கடமையு முனக்கே
இஞ்சி சூழ்தரு நல்லையம் பதியி னிலங்கு
மஞ்சு தோய்நெடுங் கோயில்கொண் டருண்மனோன் மணியே. (67)

கானல் நீரெனுங் காயம தடைந்தனு தினமும்
ஈன மாங்கொடுந் தொழில்களை யியற்றிவெம் பவஞ்சேர்
சேனை காவல ராகிய சிறுவரா னவர்க்கு
ஞான மெங்ஙனே நல்குவாய் நானிலந் தனிலே. (68)

இடைவி டாமலுன் றிருவடி யிறைஞ்சிநின் றேத்தி
அடிமை யாகும்யாம் பணிவிடை புரிந்திட வருள்வாய்
படியெ லாம்புகழ் நல்லையம் பதியினி லுயர்ந்த
வடிவ மேவுபொற் கோயில்கொண் டருள்மகேஸ் வரியே. (69)

எப்பொ ருட்குநீ முதல்வியென் றுனையிறைஞ் சாமல்
வெப்பு ஞற்றியே வீணில்நாட் கழித்திடு பவர்க்குச்
செப்பு தற்கருந் தண்ணருள் செய்வதெப் படியோ
நற்ப தத்துணை நம்பினோர்க் கருளுநா ரணியே. (70)

தஞ்சம் நீயலால் வேறிலை தமியனேன் றனக்குப்
பஞ்ச பாதகம் புரிதலாம் பற்றறுத் தகத்தில்
வஞ்ச மற்றமெய் யன்பரை வணங்கிட வருள்வாய்
செஞ்ச ரோருகச் சேவடி யனுதினந் துணையே. (71)

நினைவ ணங்கினோர்க் கருணையே நிறைந்திடப் பெறுவார்
உனைவ ணங்கியே துதித்துமேன் கவலைக ளொழியா
தெனவெ னம்மையே யின்பமார் சுகநலங் கொடுப்பாய்
வினையி னோடுமைம் பொறியெலாங் கடந்தமெய்ப் பொருளே. (72)

கருமமே தழைத் தோங்கிய வடிவமே தமியே
னொருமை யாகநின் றிருவடிக் குண்மையா யுணர்வா
யருமை மேவுசெந் தமிழ்மொழிப் பாவணிந் திடவே
வருகு வாயுல கன்னையே சவுடமா மணியே. (73)

அமலை யாகியு மருமறை முடிவெலாங் கடந்த
விமலை யாகியு மெய்த்தவப் பொருளுமாய் மேலாங்
கமலை யாகியுங் கண்ணுத லுடன்கலந் துறையும்
நிமலை யாகியு நிறைந்தசம் பூரணப் பொருளே. (74)

உலகி னுக்கணி யோங்கிய மலைமுகி லுயர்ந்த
திலக மாகிய மங்கையர்க் கணிநிறை தெருள்சேர்
நலமி குந்தமெய் யன்பருக் கணிகணாற் றவமே
யிலகு நல்லையம் பதிக்கணி யெங்களாய் நீயே. (75)

புவன மெங்கணு நிறைந்திடும் பூரணப் பொருளே
கவன மோடுனைக் கண்டுயாந் துதிப்பதெங் கடனே
அவனி யின்கணெங் குறையகற் றிடுவதுன் கடனே
தவநி லைப்பொரு ளாகிய சவுடநா யகியே. (76)

பொங்க ராவணி புனிதனுக் குகந்தபூங் கொடியே
வெங்க ராவினை வீட்டுமால் தங்கையே வியப்பாங்
கொங்க ருதபூங் குழலுறுங் குலமணி விளக்கே
சங்க ருதநீர் நாடுசேர் சவுடநா யகியே. (77)

ஊழி தோறுநின் றோங்கிய கயிலையென் றுணர்ந்தோ
ஆழ நீர்ப்பெருங் கங்கைசூழ் காசியென் றமைந்தோ
ஏழு லோகமும் புகழ்சிதம் பரமென விசைந்தோ
வாழ நல்லையில் வதிந்தனை சவுடநா யகியே. (78)

அனந்த மாமறை தேடியுங் காண்பதற் கரியாய்
நினைந்த தேமலர்த் தவிசினோன் முதலிய நா[illegible]
இனந்த வாதபே ரன்புட னிறைஞ்சிட [illegible]
கனிந்த பேரருள் புரிந்திடுங் கருணைநா யகியே. (79)



மல்கு நீர்வளம் பொருந்திய வழுதிநா டதனிற்
செல்வ மோங்கிய திருமகட் கினியதா மரைபோற்
கல்வி யோங்கிய கவின்கெழு நல்லையம் பதியிற்
சொல்வ ளம்பெறத் துலங்கிய சவுடமா மணியே. (80)

காற்றிற் றோன்றிய பஞ்சென மனங்கலங் காமற்
சேற்றிற் றோன்றுசெந் தாமரை யெனமனஞ் செழிக்க
யேற்றிற் றோன்றுநின் பதாம்புய மிறைஞ்சுதற் கருள்வாய்
மாற்றிற் றோன்றியே வயங்கிய பொலங்கொண்மா மணியே. (81)

செப்ப ரும்புகழ்ச் செல்வர்வாழ் நல்லையம் பதியி
லொப்ப ரும்புகழ்க் கோயிலி னுகந்தரு ளுமையே
அற்பு தங்கொண்மெய்த் தொண்டர்வந் தனுதினம் பணியு
மெய்ப்பெ ரும்புகழ் விளங்கிய சவுடநா யகியே. (82)

வேறு.

ஆட்டிவைக்கும் பாவையைப்போ லாடி யோடி
யங்கமெலா நொந்துதளர் வடைந்தே னுகிக்
கூட்டிலுறும் பறவையைப்போற் கவலை கூர்ந்து
கொடியவலைக் ககப்படுமா னெனவே சோர்ந்து
சேட்டையுறும் புலப்பகையே செறிந்து வாடுஞ்
சிறுமைதவிர்த் துண்மையுப தேசஞ் செய்து
வாட்டமெலாந் தீர்த்தடியேன் சிரத்தின் மீதுன்
மலர்ப்பாதஞ் சூட்டியருள் வழங்கு வாயே. (83)

பங்கயத்தோ னமைத்திடுநா ளெனையு மிந்தப்
பவக்கடலி லழுந்திடவே படைத்தா னந்தோ
சங்கையற்ற தமிழ்க்கடலி லாடல் செய்துன்
றுண்மலருக் கன்புறுமெய்ஞ் ஞான நல்கிக்
கொங்குலவும் பதாம்புயமென் சிரத்திற் சூட்டிக்
குணமிகும்பே ரின்பநலங் கொடுக்க வேண்டும்
அங்கணுறு மிராமலிங்க ரிடங்கொண் டென்று
மகிலசரா சரங்களெலா மாக்குந் தாயே. (84)

வேறு.

என்னநான் செய்வே னென்பெருங் கொடுமை
யாவர்பா லெடுத்தெடுத் துரைப்பேன்
முன்னமே யியற்றுந் தீவினைப் பயனோ
மூடனின் னுட்செயும் பவமோ
கன்னலே யினிய கண்டுசர்க் கரையே
கற்பகம் பழுத்தபூங் கனியே
சொன்னமே யெளியேன் துயர்தவிர்த் துனக்கே
தொண்டுசெய் திடும்பணி யருளே. (85)

மானிடப் பிறவி யாகிவந் துதித்தும்
வருங்கலை ஞானமொன் றின்றிக்
கானிடத் துறையுங் கருங்குயின் மழையாற்
கலங்கிமெய் வாடுதல் போல
யானிடர்க் கடலி லாழ்ந்திடா வண்ண
மருங்கல மாகவந் தருள்வா
யூனிடத் துயிரா யுணர்வுமா யுகந்த
உத்தமப் பெருங்குணக் கடலே, (86)

துரியமுந் துரியா தீதமுங் கடந்த
சுத்தசை தன்யமாம் பொருளே
அரியமா மரத்தின் கனிகளா யவற்றி
னமைந்ததீஞ் சுவைகளு மாகி
யெரியிலே யமைந்த வெம்மையா யுலக
மெங்கணு நிறைந்துவெம் பவர்க்குத்
தெரிவரும் பொருளாய்த் திகழ்பாஞ் சுடரே
சிறியனேற் கருள்புரி குவையே. (87)

காற்றொடு வெயில்கார் பனியினும் வருந்திக்
கடுந்தவம் புரிந்திடும் பயனும்
ஆற்றுட னடியார்க் கன்னமிட் டிறைஞ்சி
யறம்பல புரிந்திடும் பயனும்

நீற்றொடும் புனல்சேர் நின்மலக் கொழுந்தின்
நெடும்புகழ்க் கடலினி லாடுந்
தேற்றமாம் பொருளே நின்பதமொருகாற்
சிந்தனை செயக்கிடைத் திடுமே. (88)

பம்பரந் திரியும் பான்மையா மெனவே
பாவியேன் மனமிக வுழன்று
வெம்பியே வருந்துந் துயரெலா மகற்றி
விமலமெய்ஞ் ஞானமே யருள்வாய்
அம்பரத் தளவு மோங்கியே வளர்ந்து
மைந்தரு வெழிலினை நகைப்பான்
கொம்பெலா மலர்பூம் பொழிலுறு நல்லூர்க்
கோயில்கொண் டருண்மகேஸ் பரியே. (89)

கடைந்திடுந் தயிர்போ லுளமெலா முடைந்துன்
கழலிணை பணிந்திலா தவனா
யிடைந்துநன் னியம மென்பதொன் றின்றி
யெண்ணினுட் கழித்தன னந்தோ
மடந்தைய ரெவர்க்கு மங்கல வணியே
மனத்துறு மயக்கம தகற்றி
அடர்ந்திடு மடியேற் கரும்பொருள் வழங்காய்
அம்மையே சவுடமா மணியே. (90)

அன்பினூ டுதித்த வமுதமே யமுதத்
தமைந்திடு மினியதீஞ் சுவையே
என்புநெக் குருகக் கண்கணீர் ததும்ப
எளியனே னிறைஞ்சுமா றருள்வாய்
நின்பதந் தொழுமெய் யன்பரா மெனவே
நீள்பெருஞ் சாலிகள் வளைந்து
பம்பியே விளையும் பழனமார் நல்லைப்
பராபரி சவுடநா யகியே. (91)

ஏரிநீர் பொருந்துஞ் சங்கினஞ் சூல்கொண்
டீன்றவெண் டரளமுந் தாங்க
வாரிநீர் கொழித்த முத்தமுந் துலங்கும்
வடம்புனைந் திலங்கிய மடவார்
காரினா துலருக் கிருநிதி வழங்குங்
காதலம் பொருந்துமா டவர்கள்
சீரினா லுயர்ந்த நல்லையம் பதிவாழ்
சிவசவு டாம்பிகை யனையே. (92)

மாதமும் மாரி வழங்கலான் வனச
வாவியு நதிகளும் பிறவும்
மேதகும் படியாய் நிறைந்தநீர் வளமும்
வியப்புற விளங்குமெய்ஞ் ஞான
போதமே மிகுந்த புனிதரும் பொருந்தும்
புகழ்பெறு நல்லையம் பதிவாழ்
வேதநா யகியே யருள்சுரந் தெமக்கு
வேண்டுநல் வரங்கொடுத் தருளே. (93)

அன்னையே வருக வரும்பொருள் வருக
வடியனே னாருயிர் வருக
பொன்னைநேர் மணியே வருகவென் னுளத்திற்
பொருந்துவா னமுதமே வருக
நின்னையே யனையென் றுலகெலாந் துதிக்கு
நிமலையே வருகநன் னிலைகொண்
மின்னையே யனையாய் மறைமுடி வதனில்
விளங்குப நிடதமே வருக. (94)

O25:3S.2145 N29
183549

சீரெலாம் பொருந்துஞ் செல்வமே வருக
திகழுமெய்ஞ் ஞானமே வருக
பேரெலாம் பொருந்து பெரும்புகழ் வருக
பிரணவ வடிவமே வருக

பாரெலாம் பொருந்து மிருளெலாந் தூரத்தும்
பான்மதி யனையவள் வருக
காரெலாம் பொழியு நல்லையம் பதிவாழ்
கருணைநா யகிவரு குகவே. (95)

அழுதிடும் புதல்வர்க் கமுதநீ யளித்தன்
றருந்தமிழ்ப் பாவழங் கினையே
தொழுதிடும் புகழ்விச் சாவதி தனக்குத்
தோன்றுவோம் மகவெனப் புகன்றாய்
எழுதரு மறைக ளெங்கணுங் காணு
மிறைவியே யெமக்கினி தருள்வாய்
முழுதுமன் னலஞ்சேர் நல்லையம் பதிவாழ்
முக்கணர் சவுடநா யகியே. (96)

உத்தம குணங்கள் யாவையுங் கொடுத்துன்
னுயர்பெரும் பதாம்புயம் பணியுஞ்
சித்தமுங் கொடுத்த செல்வமே சிறியேன்
சிந்தனை நோய்தவிர்த் தருள்வாய்
அத்தனைப் பிரியா திருந்துல கனைத்து
மைந்தொழி லியற்றிடு மம்மே
சுத்தமெய்ஞ் ஞான சுயம்பிர காச
சோதியாய்த் தோன்றிய சுடரே. (97)

பெருமையும் வேண்டேன் புகழையும் வேண்டேன்
பெரும்பதம் யாவையும் வேண்டேன்
ஒருமையா முணர்வோ டுன்னையே வணங்கு
முயர்ந்ததோர் வரத்தைவேண் டினனால்
அருமையா யெனக்குன் றிருவருள் தருவா
யம்மையே யணங்கர சாகி
யிருநிலம் புகழு நல்லையம் பதியி
லிலங்கிய சவுடநா யகியே. (98)

வெண்ணெயுண் டருளுங் கண்ணனோ டுதித்த
விமலையே யமலையே விளங்கும்
பெண்ணையுண் டருளும் பிராணுட னுகர்தும்
பேறம் வளர்த்தபெண் கொடியே
விண்ணையுண் டருளு மிருளெலாம் விழுங்கி
விளங்குமா மதியென விரிநீர்ப்
பண்ணையுண் டருளு நல்லையம் பதியிற்
பரந்தசீர் நிறைந்தபார்ப் பதியே. (99)

உம்பர்நா யகரா மிராமலிங் கேச
ருளத்துயி ரோவிய மயிலே
கொம்பிலே பழுத்த கொழுங்கனிச் சுவையே
குணங்கெழு மின்னிசைக் குயிலே
அம்பரர் துதிக்கு மோதிமப் பெடையே
அழகெலா நிறைந்தபே ரழகே
செம்பொனே மிகுந்த செல்வமே யெளியேன்
சிந்தனை நோய்தவிர்த் தருளே. (100)

மங்கையர் மோக மையலா லுழன்றே
மனமது வருந்திநா டோறும்
சங்கையில் லாத பவங்களே புரியுந்
தமியனேற் கருளுநா ளுளதோ
எங்கணு முழங்கு மங்கல வியங்க
ளெழின்மழை முகிலென வார்க்கும்
நங்கைய செழில்சேர் நல்லையம் பதிவாழ்
நலந்தருஞ் சவுடநா யகியே. (101)

கண்டுகண் டுவக்குங் கண்ணுத லிடமாய்க்
கலந்தபே ரானந்த மயமே
தொண்டுகொண் டடியேன் வந்தனை யேற்றுத்
துலங்குநின் கருணைதந் தருள்வாய்

மண்டுவெங் கனல்சேர் மகங்களே புரிவோர்
மறைமுழக் கெங்கணு மலிந்த
பண்டிசை புகழு நல்லையம் பதியி
லிலங்கிய சவுடமா மணியே. (102)

செந்தினைப் புனத்து வள்ளிநா யகியுந்
தெய்வயா னையுமுனைத் தினமும்
வந்தனை புரியு மருகியர் தமக்கு
மகிழ்வினோ டாசிகள் வழங்கும்
சுந்தர வலியே யெமக்கருள் புரிவாய்
சுத்தமெய்ஞ் ஞானவான் கடலே
நந்தின முளவோ டெங்கணு முழங்கு
நல்லைவாழ் சவுடநா யகியே. (103)

முத்தமிழ் வளர்ந்த சங்கநா லுடைய
முதுபெரும் பாண்டிநா டதனில்
மெத்தவும் புகழ்சேர் நல்லையம் பதியின்
மேவுபொற் கோயிலின் விளங்கும்
நித்திய வடிவே நிராமய முதலே
நியமமே யன்பருக் கருளும்
சுத்தமெய்த் தவத்தி னுருவமா யுலகிற்
றுலங்கிய சவுடநா யகியே. (104)

வஞ்சமொன் றில்லா மனத்தினோ டுனையே
வலம்புரிந் தனுதினம் வணங்கி
நெஞ்சமன் போடுந் துதிபுரிந் தினிதாம்
நியமமுற் றிருக்கவே யருள்வாய்
கஞ்சமா மலர்மே லனப்பெடை யிருப்பக்
களிகொள்வண் டினமிசை முழங்கல்
வஞ்சிபா ரதியை யறிஞர்போற் றிடல்போல்
வளமிகு நலைமதிக் கொழுந்தே. (105)

பங்கயத் தடங்க ளெங்கலுங் குடையும்
பாவையர் மடநடைக் கொதுங்கித்
தங்குமோ திமங்க ளோடவு மயில்கள்
சாயல்கண் டிரியவுந் தகவார்
பொங்குபே ரெழில்சேர் நல்லையம் பதியிற்
புண்ணிய வடிவமாய்ப் புகமோ
டெங்குமாய் நிறைந்துந் தருமமோ ருருவா
யிலங்கிய சவுடநா யகியே. (106)

சீர்வளம் பொருந்துஞ் செல்வமே யருளுஞ்
சிறந்தவே தாகமப் பொருளே
பார்வளம் பொருந்து மன்னரா யினுமுன்
பாதமா மலர்பணிந் திலரேல்
பேர்வளங் குறைந்து நிதியெலாங் குறைந்து
பெருந்துய ருறுவர்பே ருலகில்
கார்வளங் கனகம் பொழிந்திட வருளுங்
கருணைசேர் சவுடநா யகியே. (107)

பொன்னதாய் மணியாய்ப் பொருந்துபே ரொளியாய்ப்
புனிதவான் மதிக்கொழுந் தாகி
யென்னுளே வயங்கு மின்பவா ரிதியா
யிலங்கிய கருணைமா மழையாய்
மன்னுமா நிலைசே ரறிவெலாங் கொடுத்தே
மாசறுந் தவநிலை தெருட்டி
உன்னுமென் மனவாக் கிடையனு தினமு
முவந்துகாத் தருளிய முதலே. (108)

இன்பமே யின்பப் பெருக்கமே யெளியே
னிதயமா மலரினை யுகந்தே
யன்பினோ டினிதாய்த் துதிபுரிந் திடுமா
றடியனேற் கருள்செய வேண்டும்

செம்பொனே மணியே செழுஞ்சுடர்க் கொழுந்தே
சீர்பெறுஞ் சுகாரம்ப வெளியே
நம்புவோர்க் கருளு மிராமலிங் கேசர்
நாடோறும் புகழுநா யகியே. (109)

ஆவின்பா லதனுள் வெண்ணெயுந் திலத்தி
லார்ந்திடு மெண்ணெயு மெனவும்
பூவின்மா மணமுந் தீங்கனிச் சுவையும்
போலவே யுலகெலா நிறைந்து
மேவிய திருவே மறைமுடி வதனில்
விளங்குப நிடதமாம் பொருளே
பாவியேன் பவங்கள் போக்கிநீ கிருபை
பாலிக்க வேண்டுமிக் கணமே. (110)

வேறு.

அந்தோவென் கொடுமைதனை யார்க்குரைப்பே னரியபெருங்
கவலைக் காளாய்
நொந்தேன்முன் செய்ததொரு தீவினையால் விளைந்ததொரு
நோன்மை தானோ
சந்தேயு நெடுந்தடந்தோட் சண்முகற்கு வேல்கொடுத்த
சத்தி நீயே
வந்தேயென் கலிமாற்றி வரங்கொடுக்க வேண்டுமன
மகிழ்ந்திப் போதே. (111)

ஒன்பதுவாய் மனையெனுமிக் காயமதைக் காயமென
வுன்னி யேநா
னென்பதுகொண் டகங்கார மேய்ந்திடுமுட் செடிமாங்க
ளினிதுண் டாக்கி
யின்பமா மதன்கணையா லெழின்மோக மையலிருட்
கடலின் மூழ்கி
நின்பதமே வணங்காத பிழைபொறுத்தே நன்மையெலாம்
நிகழ்த்தா யம்மே. (112)

செங்கதி ருதய மாகுமு னெழுந்து
தேன்கமழ் மணமலர் பறித்துத்
துங்கமா மாலை வேய்ந்துனக் கணிந்து
துதித்திடுங் கடமைதந் தருள்வாய்
அங்கையின் வயங்கும் பசியபூங் கிளியி
னருண்மொழிக் காவலாய் நோக்க
இங்கித முறுநற் செஞ்சொலை பயிற்று
மினியசெங் குமுதவாய் நிதியே. (113)

முக்கனி வழியுந் தேன்களே நிறைந்த
முதுபெருங் கழனியின் மடவார்
மைக்கருங் கண்கட் குடைந்தசே லினங்கள்
வான்பெருங் கமுகினிற் றுவும்
மிக்கதண் பழனத் திடைவளர்ந் தெழுந்த
மேதகுஞ் செந்நெலே விளைந்து
தக்கமா வளஞ்சேர் நல்லையம் பதிவாழ்
சவுடமா மணிதுணை யெமக்கே. (114)

மாமதி புனைந்த விராமலிங் கேசர்
மகிழ்ந்துளங் களிக்குநா யகியே
நேமமா யன்போ டனுதினம் வணங்கும்
நிலையுளார்க் கருளும்வான் பதமே
சாமனு முதலாங் கடவுள ரெவர்க்குங்
கற்பகா டவியொடு நிதியும்
சேமமாம் பொருளுந் திருவெலாங் கொடுக்குஞ்
சிவசவு டாம்பிகை யணியே. (115)

எங்குமாய் நிறைந்த வேகநா யகியே
யெண்ணரும் புவனங்க ளெல்லாந்
தங்கியே வளருஞ் சராசரம் படைத்துந்
தண்ணருள் சுரந்தவை காத்தும்

பொங்கிய வருளே நிறைந்தவா ரிதியாய்ப்
பொழிந்திடுங் கருணைமா முகிலே
பங்கமி லுலகோ ரருந்தவப் பயனே
பாலனேற் கருள்பரா பரியே. (116)

முத்தியே வழங்கு மன்னையா மெவர்க்கு
முதல்வியாஞ் சவுடநா யகியைப்
பத்தியாய் வணங்காய் பாதமா மலர்க்குப்
பன்மலர் சொரிந்துமே துதியாய்
நித்திய மாகும் பொருளென மதியாய்
நிலையிலா துழன்றனை யுந்தோ
சுத்தமொன் றில்லா நெஞ்சமே யினிநீ
தொண்டரிற் சேர்வதெப் படியே. (117)

ஆதியந் தமுமில் லாதமெய்ப் பொருளா
யன்னையாஞ் சவுடநா யகியை
யோதியே யுணராய் தொண்டரா னவர்க்கு
முண்மையாய் நடந்திலாய் மனமே
மேதியி லுகந்தே யந்தகன் வருநாள்
வீணரி லென்செய்வா யவனைப்
போதிநீ யெனவே புறந்தரும் படியாய்ப்
புனிதமா தவம்புரிந் திலையே. (118)

அன்னசா லைகளுங் கல்வியே பயிலு
மருந்தமிழ்ச் சாலையு மணியே
மன்னிய பெரியோர் மடங்களு முயர்ந்த
மாடமா ளிகையுமே நிறைந்தும்
இன்னிலம் புகழுந் திருவிழா வணியு
மிலங்கிய திருநல்லூ ருகந்த
சொன்னலம் பொருந்துந் தொண்டர்கள் வணங்கித்
துதித்திடுஞ் சவுடமா மணியே. (119)

கார்பெறுங் கயமா முகனைவென் றருளக்
கரிமுகத் தைங்கரன் றனையுஞ்
சூர்முத லவுணர் தங்களைத் தடியச்
சுடர்வடி வேற்கும ரனையுஞ்
சீர்பெறும் புதல்வ ராகவின் றருளுஞ்
செல்வமே சிறியனேன் றனக்கும்
போர்பெறும் பவத்தை வெல்லுதற் கின்னே
பொருந்திய மோனவா ளருளே. (120)

ஆணுமாய்ப் பெண்ணு யலியுமாய் மற்று
மனந்தமா முயிர்த்தொகை யாகிச்
சேணுமாய்ப் புவியா யுலகெலா மாகித்
திசைகளுங் கடல்களு மாகிக்
காணுகின் றனவுங் காண்பரி தெனவுங்
கலந்துல கனைத்தினு நிறைந்த
மாணுறும் பொருளே யுன்னையே வணங்கு
மைந்தனைக் காப்பதுன் கடனே. (121)

செய்யதீங் கரும்பிற் சேர்ந்தவின் சுவையே
தேனொடு கலந்ததெள் ளமுதே
துய்யமுக் கனியிற் றோன்றிய ரசமே
துலங்கிய சீனிசர்க் கரையே
வெய்யமா பவங்கள் விலக்கிமெய்ஞ் ஞானம்
விளங்கிய பொக்கிச மாகி
வையகந் தனிலே மைந்தரா மெமக்கு
மகிழ்நல் வரங்கொடுத் தருளே. (122)

அன்மயம் பார்ந்த விருளெலாந் துரத்து
மலங்குவான் மதியமே போல
என்மனத் தடங்கா மயலிரு ளகற்றி
யிலங்குநின் னருள்விளக் கேற்றிக்

கன்மனத் தினையுங் கனன்மெழு காக்கிக்
கசிந்துனை வணங்குதற் கருள்வாய்
நின்மயப் பொருளே நீரணி வேணி
நிருத்தர்பா லுகந்தபூங் குயிலே. (123)

மணமிகுந் திலங்குங் கற்பகக் கனியே
வானுளோர் கடைந்தவா னமுதே
குணமிகுந் திலங்கு மாகதக் கொழுந்தே
கோலமே மிகுந்தபைங் கிளியே
பணமிகுந் திலங்கும் பாந்தளைப் புனைந்த
பரமரா மிராமலிங் கேசர்
வணமிகுந் திலங்கும் பங்கினி லுகந்த
மனோன்மணி யுனதடைக் கலமே. (124)

பெரும்புகழ் நிறைந்த விராமலிங் கேசர்
பெட்பொடுங் குலவுமெய்ப் பொருளே
தரும்புக முலகோர் சந்ததம் வணங்குந்
தயாநிதி சகஸ்திர தளஞ்சேர்
அரும்புகழ்க் கமல மணமல ருகந்த
அன்னையே யருமறைப் பொருளே
வரும்புகழ் நிறைந்தே யென்மனத் திலங்கு
மாசிலா மணிவிளக் கணியே. (125)

வானகம் புகழும் பனிமலை யுயிர்த்த
வல்லியாய்ச் சிறுவிதி மகளாய்த்
தேனருந் தெரியற் செழியன்மா மகவாய்த்
திடம்பெறும் பசுதர்கோன் மகளாய்
ஞானமே மிகுந்த நற்றவக் கொழுந்தாய்
நாடொறு மிராமலிங் கேசர்
பானல முவந்த பசியபூங் கொடியாம்
பராபரி யெங்களா ருயிரே. (126)

வேறு.

பொய்யாகு மெய்யிதனை மெய்யெனவே யெனதுளத்திற்
பொருந்தி நாளுஞ்
செய்யாத தொழிலனைத்துஞ் செய்திளைத்தேன் நின்றனக்கே
தொழும்பு செய்யேன்
மையாருங் கொடுமனத்து வஞ்சகரைத் தொடர்ந்துழல்வேன்
வருத்த மாற்றிக்
கையால்நன் கபயமுடன் வரதமுந்தந் தருள்வதுன்றன்
கடனே யம்மே. (127)

வேறு.

பொய்ம்மையென் பதனைக் கனவிலு மறந்து
புனிதமா மெய்மொழிந் திடவுஞ்
செய்தொழி லனைத்து நன்மையா கிடவுந்
திருவருள் புரிந்திட வேண்டும்
ஐயரா மிராம லிங்கர்பா லுகந்தே
யருட்பெருஞ் சத்தியா யிலங்குந்
துய்யமா வணியே நல்லையம் பதியிற்
றுலங்கிய சவுடமா மணியே. (128)

விண்ணுளோர் புகழ்வே தாகம புராணம்
விதிமுறை கேள்வியா லுணர்ந்தும்
புண்ணிய தீர்த்த மாடியு நினது
பொன்னடி வணங்கிட வருள்வாய்
தண்ணளி சுரந்தெவ் வுலகமுங் காக்குந்
தயாபரி யாகியு மெவர்க்குங்
கண்ணுணே ரணியாய் நல்லையம் பதியிற்
கவின்பெறுஞ் சவுடமா மணியே. (129)

ஐந்திணைப் பொருளு மமைத்துளோ ராகி
யருந்தொழில் வாணிபம் புரியும்
விந்தையே மிகுந்த ஆவணம் பலவும்
விளங்கிடுந் தடங்கட லொலிபோல்

சந்தத முழங்கு நல்லையம் பதியிற்
றண்ணருள் சுரந்தினி திலங்கும்
செந்தமிழ்க் கடலாய் ஞானவா னமுதாய்ச்
செழித்திடுஞ் சவுடநா யகியே. (130)

கோலமா யனந்த கோடியாம் புவனங்
கொண்டதோர் கலங்களுண் டாக்கிச்
சாலவு முவந்தே யடுக்கடுக் காகச்
சமைத்திடுந் தோறுமே யவற்றை
யாலமாங் களத்துப் பித்தநீ ருடையா
ரழித்தழித் தாடல்செய் திடவுஞ்
சீலமாய் முனியா தக்கணத் தமைக்குஞ்
செல்வமே சவுடமா மணியே. (131)

கன்மனம் பொருந்தும் பாவியா யினுமுன்
கழலிணை பணிந்திட வருள்வாய்
நன்மனம் பொருந்துந் தொண்டர்கள் தமக்கு
நாடொறும் பணிசெய வருள்வாய்
சொன்மனம் பொருந்து மாதுலர் தமக்குச்
சுவையொடும் விருந்திட வருள்வாய்
என்மனம் பொருந்து மின்பவா ரிதியே
யினைவெலா மெமக்கருள் குவையே. (132)

உன்னையே வணங்கி மெய்வாம் பெறுமா
றுணர்த்தியு மனமுரு காமல்
மன்னுமைம் பொறியின் மார்க்கமே யுழலு
மையலைத் தவிர்த்துமெய்ஞ் ஞானந்
தன்னையே தெருட்டி யின்பதம் பணியத்
தண்ணருள் புரிந்திட வேண்டும்
செந்நெலங் கழனி தென்மலை பொலியுந்
திருநலூ ருகந்தசெம் மணியே. (133)

வேறு.

செங்கதிரும் வெண்மதியுஞ் சேய்புதனும் பொன்னவனுந்
திறமே மிக்க
பொங்கசுரர் குலகுருவாம் புகாவனுஞ் சனியொடுபாம்
பிரண்டு மாகத்
தங்கியகோ ளொன்பானுற் றளர்வேன்ற னிடாகற்றித்
தரும மேவுந்
துங்கமிகும் நினதுபதாம் புயஞ்சூட்டித் துதிக்குநலங்
கொடுப்பா யம்மே. (134)

வேறு.

எண்பதூர் முதலா யெங்கணு முகந்த
வெழில்பெருந் தேவலன் மாபோர்
நண்பினோ டுனது நளினமா மலர்த்தா
ளுடொறும் வணங்கவு மருளி
வண்புக ழமைந்த கல்விஞா னமுமெய்
வாய்மையு மைந்தருந் திருவுந்
தண்மையுந் தகவுந் தருமமே முதலாஞ்
சகலநன் மையுங்கொடுத் தருளே. (135)

வேறு.

வரந்தருந் திருக்காளத்தி வானதிபொ ருந்துங்காசி
பாந்தசி ரருணைவிண்ணோர் பணியுமா மதுரைகாஞ்சி
அரந்தைதீ ராரூர்தில்லை யனந்தமாம் பதிவாழம்மை
நிரந்தரந் திருநல்லூரே நிலைகொண்டு நலநேர்ந்தாளே. (136)

வேறு.

சீர்பொருந்துஞ் சிவசவுடாம் பிகையும் வாழி
செல்வமிகு மிராமலிங்கக் கடவுள் வாழி
பேர்பொருந்து மாமறையா கமங்கள் வாழி
பெரும்புகழ்சேர் கலைஞானம் பெருக வாழி
பார்பொருந்து மந்தணரே முதல தாகப்
பகருகின்ற திருமாபோ ரெவரும் வாழி
தார்பொருந்து மன்னர்மனு நீதி யோங்கத்
தாரணியின் மழைபொழிந்தெவ் வுலகும் வாழி. (137)

வேறு.

அந்தணர் மரபின சாதி யாகவே
வந்திடு மரபின ரெவரும் வாழிமெய்ப்
பந்தமா யன்னையைப் பணியு மன்பரு
மெந்தநா ளினுமுவந் திருக்க வாழியே. (138)

வேறு.

அன்னை யாஞ்சவு டாம்பிகை நீதினிற்
சொன்ன விப்பனு வற்றுதி செய்குவோர்
பொன்னொ டும்புகழ் நன்மை பொருந்தியே
மன்னி வாழ்குவர் மாநிலத் தென்றுமே. (139)

வேறு.

அம்புவியிற் றேவலன்றன் மரபிலுளோ ரனைவருக்கு
மதிப ராகிச்
செம்பொன்மணி முடிபுனைந்த திறலுடையோர் மனுநீதி
தேர்ந்த செல்வர்
உம்பர்மிகுங் கலைஞான மொருங்குணர்ந்தோ ருயர்ந்தமழை
முகிலே யொப்பார்
நம்பினவர் தமைக்காக்கும் புகழ்வேந்த ரிருவருமெந்
நாளும் வாழி. (140)

தேங்குபுகழ் நாட்டாண்மை சங்கரப்பேந் திரன்முதலாய்ச்
செல்வம் வாய்ந்த
ஈங்கெவரும் புகழ்பரவுந் தேவாங்க ரெழின்மரபோ
ரினிது கூறத்
தாங்குபுகழ் நல்லைவளர் தாய்சவுடாம் பிகைமிசைச்செந்
தமிழி னாலே
ஓங்குபுகழ்ப் பாமாலை யுவந்தணிந்தான் சவுடபனென்
றுரைப்போன் மன்னோ. (141)

9B
6-197

சீர்பொருந்தும் நல்லிவளர் சிவசவுடாம் பிகையன்னையைத்
 தினமும் போற்றும்
பேர்பொருந்து மன்புடையோன் பெரும்புகழுந் தருமமுமே
 பெருகுஞ் செல்வன்
தார்பொருந்தும் மன்னரெலாம் புகழ்சாமி நாதபதி
 தவத்தாற் றேன்றி
ஏர்பொருந்துங் கலைஞான முழுதுணர்ந்தோ னெப்பொருளு
 மியைந்து வாழ்வோன். (142)

செங்கமலத் திருமடந்தை சிறந்திருக்கும் பொருளுடையோன்
 சீர்த்தி யுள்ளோன்
துங்கமிகு மெழிற்சாமி நாதமகி பதிசுகுணந்
 துலங்கும் பூமான்
திங்கள்புனை யிராமலிங்கர் தினமுவக்குஞ் சிவசவுடாம்
 பிகைபா மாலை
பொங்குமுய ருலகமெலாம் போற்றிடவே அச்சியற்றிப்
 புகழ்பெற் றனே. (143)

வேறு.

இன்னி லந்தனி லேயிசை மேவிய
சொன்ன லம்பெறுந் தூயவ ராகிய
மன்னு தேவலன் மாமர போரெலாம்
பொன்ன மைந்த புகழ்பெற வாழியே. (144)

அம்பொற் கோயி லுகந்திடு மம்பிகை
செம்பொற் றுடொழுஞ் செல்வரும் வாழியே
உம்பர்க் கேய்ந்திடு மொண்டமிழ் மாலையை
நம்பிப் போற்றுநல் லோர்களும் வாழியே. (145)

வேறு.

ஆரணங்கள் போற்றுகின்ற அன்னைசவு டாம்பிகைக்கே
 யன்பு கூர்ந்து
பூரணமா மனத்துடனே புகழ்ந்திடும்பா மாலைதனைப்
 புனைந்தா னிந்தத்

தாரணியிற் கலியுகமைந் தாயிரத்தைச் சார்ந்திடுமோ
 ரிருபான் மூன்றில்
ஏரணியம் புவிமாந்தர் துதித்திடவே சவுடயனென்
 றிசைப்போன் மன்னே. (146

வேறு.

அனைத்துலகு மீன்றருளு மன்னைசவு டாம்பிகைக்கு
மனத்திலுறு போன்பார் மாதவஞ்சேர் தேவலன்றன்
இனத்திலுளோர் கும்பாபி டேகமியற் றினருலகோர்
நினைத்தபொரு ணன்மையுடன் நீடூழி வாழியவே. (1

முற்றிற்று.


தமிழ்நாடு ஆவணக் காப்பக நூலகம்
183549
சென்னை 600 0

O25.58 21 95 P
1909

